மலர் 15 இதழ் 240

NAVAMANI (Tamil Daily) MADRAS

நாகை தருமன்
16/1, பீட்டர்ஸ் ரோடு காலனி
சென்னை-600 014.

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 76139



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 15-5-75 வியாழன் வெளியூர் 16—5—75 வெள்ளி

அ. தி. மு. க.வுக்கு
தி. மு. க. மந்திரி தூது
3-ம் பக்கம்

# கருணாநிதிக்கு கறுப்புகொடி காட்டுவது ஏன்?

# எம். ஜி. ஆர். அறிக்கை

## "ஜனநாயக உரிமையை பாதுகாக்கவே கிளர்ச்சி"

சென்னை, மே 15—முதலமைச்சர் கருணாநிதியை எதிர்த்துகறுப்புக் கொடி ஆர்ப்பாட்டம் நடத்த அண்ணா தி. மு. கழகம் முடிவு செய்துள் ளது ஏன் என்பதை விளக்கி அ.தி.மு.க. பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். அவருடைய கட்சித் தொண்டர்களுக்கு அறிக்கை ஒன்று வெளி யிட்டிருக்கிறார்,

ஜனநாயகத்தில் உள்ள அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கவே இந்தக் கிளர்ச் சியை தாம் நடத்துவதாக எம். ஜி. ஆர். தெரிவித்தார்.

அந்த அறிக்கையில் எம். ஜி. ஆர். கூறியதாவது:—

இந்த மாதம் 5-ந் தேதி யன்று சென்னை சென்டிரல் ரெயில் நிலையத்தில் ஜெயப் பிரகாஷ் நாராயணனுக்கு எதிராக புது காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய கட்சிகளின் ஊழியர்கள் ஆர்ப் பாட்டம் நடத்தியபோது அவர்களிடையே அமைதி யின்மை ஏற்பட்டிருந்தால் போலீசார் தலையிட்டு நட வடிக்கை எடுத்திருக்கலாம். ஆனால் அந்தக் கட்சிகளின் தொண்டர்களை ஆளுங் கட்சி யான தி. மு. க.வின் தொண் டர்கள் தாக்கினார்கள். இதற் காக முதலமைச்சர் கருணா நிதி எவ்வித கண்டனத்தை யும் தெரிவிக்கவில்லை.

ஜனநாயகத்தில் கறுப்புக் கொடி காட்டி எதிர்ப்பு தெரி விப்பது அடிப்படை உரிமை யாகும். இந்த உரிமையை நிலை நாட்டுவதற்காகத் தான் முதலமைச்சர் கருணாநிதிக்கு எதிராக கறுப்புக் கொடி காட்ட தீர்மானிக்கப்பட் டது என்றார் எம். ஜி. ஆர்.

### சிவாஜி கணேசனுக்கு பதில்

சிவாஜி கணேசனின் புகார் பற்றி குறிப்பிடுகையில் எம். ஜி. ஆர். தெரிவித்ததாவது:-

ஜெயப்பிரகாஷ் நாராய ணனை எதிர்த்து நான் போராட்டம் நடத்த போவ தாக அறிவித்திருந்ததாகவும் ஆனால் ஜெயப்பிரகாஷ் சென் னைக்கு வந்தபோது நான் பெங்களூருக்கு ஓடிப்போய் விட்டதாகவும் சிவாஜிகணே சன் கூறியுள்ளது தவறு. ஜெயப்பிரகாஷ் எதிர்ப்பு போராட்டம் எதையும் நான் அறிவித்ததில்லை.

ஜெயப்பிரகாஷ் இயக்கத்தி னால் ஜனநாயகத்திற்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது என் றும் ஆகவே தேசிய முற்போக் குக் கட்சிகள் ஒன்று சேர்ந்து ஜனநாயக பாதுகாப்பு முன் னணி அமைத்து பிரச்சாரம் நடத்த வேண்டும் என்றும் கூறியிருந்தேன். இந்த விஷயத்தில் போராட்டம் எதுவும் நான் அறிவித்த தில்லை என்றார் எம். ஜி. ஆர்.

### காமராஜ் மீது புகார்

சென்னையில்சென்ரல் ரயில் நிலையத்தில் ஜெயப்பிரகாஷ் எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்தின் போது புது காங்கிரஸ் தொண்டர்கள் தாக்கப்பட் டதுபற்றி பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் இன்னமும் கண்டிக்காதது ஏன் என்று எம்ஜிஆர் கேட்டார்.

ஆனல் முன்பு பழைய காங் கிரஸ் போராட்டங்களில் ஏராளமான பேர் கைதுசெய் யப்பட்டபோது அ-தி.மு.க. கண்டித்து அறிக்கை வெளி யிட்டதாக எம். ஜி. ஆர். சுட்டிக் காட்டினார்.

சென்னை நகருக்கு

# பாலாறு தண்ணீர் எப்போது வரும்? கருணாநிதி பேட்டி

சென்னை, மே 15-சென்னை நகருக்கு பாலாறு தண்ணீர் செப்டம்பர் மாதத்துக்குள் கிடைக்கும் என்று எதிர் பார்க்கப்படுவதாக முதல் அமைச்சர் கருணாநிதி கூறி னார்.

டெலிவிஷன் பேட்டி ஒன் றில் கருணாநிதி மேற்கண்ட வாறு கூறினார்.

பாலாற்றிலிருந்து 40 லட்சம் காலன் தண்ணீர் கிடைக்கும் என்று அவர் தெரிவித்தார்.

வீராணம் திட்டம் 1976-ல் முடிவடையும் என்றும், இத னால் தினமும் 4 கோடி காலன் தண்ணீர் அதிகமாகக் கிடைக் கும் என்றும் அவர் சொன் னார்.

சென்னை நகர மக்களின் தண்ணீர் கஷ்டத்தை போக்க எல்லாவிதமான நடவடிக்கை களும் எடுக்கப்படும் என்றும் அவர் சொன்னார்.

திருவான்மியூர் பகுதியிலி ருந்து தினமும் 10 லட்சம் காலன் தண்ணீர் இந்த மாதக் கடைசிக்குள் கிடைக்கும் என் றும் கருணாநிதி சொன்னார்.

# அமெரிக்கா அணுகுண்டு சோதனை

வாஷிங்டன், மே 15— சுமார் 200 கிலோ டன் எடை உள்ள அணுகுண்டு ஒன்றை அமெரிக்கா பூமிக்கடி யில் வெடித்து சோதனை நடத் தியது.

நெவதாவில் உள்ள சோத னைப் பகுதியில் இந்த அணு வெடிச் சோதனை நேற்று நடைபெற்றது.

இந்த ஆண்டு நடைபெற்ற அணு வெடிச் சோதனைகளில் நடைபெற்ற சோதனை மிகப் பெரியதாகும்.

# சிறு சேமிப்பை பெருக்க வரிச் சலுகைகள்: சி. எஸ். அறிவிப்பு

புதுடெல்லி, மே 15—சிறு சேமிப்பை ஊக்குவிப்பதற் காக வரி விலக்குகளை மத்திய நிதி அமைச்சர் சுப்பிரமணி யம் அறிவித்திருக்கிறார்.

இந்த தகவலை இன்று டெல்லியில் நடைபெற்ற தேசிய சேமிப்பு மத்திய ஆலோசனைக் குழு கூட்டத் தில் அவர் வெளியிட்டார்.

ரூ. 50,000 வரை தற் போது தேசிய சேமிப்பு பத்திரங்களை வைத்துக் கொள்வதற்கு வரி விலக்கு அளிக்கப்படுகிறது. இனி ரூ. 1 லட்சம் வரை வரி விலக்கு அளிக்கப்படும் என்றார் சுப்பிரமணியம்.

தற்போது பாங்குகளில் ரூ 75,000 வரை கூட்டுக் கணக்கு வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படுகிறது. இப் போது அறிவிக்கப்பட்ட வரி விலக்குச் சலுகையினால் ரூ. 1,00,000 வரை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படும்.

5 ஆண்டு "ரிக்கரிங்" சேமிப்பு திட்டத்தில் சமூக பாதுகாப்பு அம்சம் இருப்ப தால் அந்தத் திட்டத்தில் அபிவிருத்தி செய்யப்படும் என்றார் அமைச்சர்.

இந்தத் திட்டப்படி இரண்டு ஆண்டுகள் ஒழுங்காக ரூ 5 அல்லது 10 தமது கணக்கில் கட்டிக் காண்டு வந்தஒருவர் இறந்துவிட்டால் திட்ட முடி வில் அவருக்கு கிடைக்க வேண்டிய முழு பணமும் அவ ரது குடும்பத்திற்கு கிடைக் கும். ரூ 20 கட்டி இந்த திட்டத்தில் சேருவோருக்கும் இந்த சலுகை கிடைக்கும். இந்தத் திட்டத்தால் கூடுத லாகக் குடும்பத்திற்கு கிடைக் கும் லாபம் ரூ. 1000 வரை இருக்கும்.

இந்த 5 ஆண்டு 'ரிக்கரிங்' சேமிப்பு திட்டத்தில் சேர விரும்புபவர்கள் அனுமதிக்கப் படுவார்கள் என்று அமைச்சர் மேலும் கூறினார்.

# கூரையுடன் வானத்தில் பறந்த குழந்தை

ஆத்தூர், மே 15—ஆத் தூரில் அடித்த கடுமையான சூறாவளிக் காற்றினால் ஒரு வீட்டின் கூரை அப்படியே வானத்தில் பறந்தது. அந்தக் கூரையில் கட்டப்பட்டிருந்த தொட்டிலில் 3 மாத குழந்தை யொன்றும் வானத்தில் பறந்தது சில நிமிடங்களுக்குப் பின் கூரை ஒரு இடத்தில் விழுந் தது. நல்லவேளையாகக் குழந்தை உயிர் தப்பிவிட் டது.

சேலம் மாவட்டத்தில் ராசி புரம் பகுதிகளில் வீசிய சூறா வளிக் காற்றில் வீட்டுக் கூரைகளும், வீட்டு ஓடுகளும் பறந்தன.

அத்தனூர் அரசினர் உயர் நிலைப்பள்ளியின் கட்டிடம் ஒன்று சரிந்துவிழுந்து, தரை மட்டம் ஆகிவிட்டது.

மின்சார கம்பங்கள் சாய்ந் தன. மரங்கள் பல விழுந்து விட்டன.

# யாயாகான் மீது வழக்கு கைவிடப்பட்டது

ராவல்பிண்டி, மே 15— பாகிஸ்தான் முன்னாள் ஜனாதி பதி யாயாகான் மீது இருந்த ஊழல் விசாரணை கைவிடப் பட்டது.

லஞ்சம், ஒழுங்கீனம், அதி கார துஷ்பிரயோகம் ஆகி யவைகளுக்காக யாயாகான் விசாரணை செய்யப்பட்டு வந் தார். போதுமான ஆதாரம் கிடைக்காததால் விசாரணை கைவிடப்பட்டது என்று கராச்சி ஆங்கிலப் பத்திரிகை ஒன்று கூறுகிறது.

நீண்ட விசாரணைக்கு பின் னர் யாகியாகான்மீது இருந்த குற்றச்சாட்டுகள் பொய்யா னவை என்று கண்டுபிடிக்கப் பட்டு அவர் மீது இருந்த வழக்கை விசேஷ போலீஸ் கைவிட்டது என்று அந்தப் பத்திரிகை கூறுகிறது.

# ஏற்காட்டில் ஆலங்கட்டி மழை

சேலம்,மே 15—ஏற்காட்டில் நேற்று முன்தினம் இரவு ஆலங் கட்டி மழை பெய்தது. கடும் புயலும் அடித்தது. தெருக் களிலும், வீடுகளிலும் பனிக் கட்டிகள் சிதறிக் கிடந்தன.

கடந்த பத்து ஆண்டுகளில் இப்படிப்பட்ட ஆலங்கட்டி மழை பெய்ததில்லை என்று கூறப்படுகிறது. ஒவ்வொரு ஆலங்கட்டியும் எலுமிச்சம் பழம் அளவு இருந்ததாம்,

சேலம்நகரிலும் கடும் மழை பெய்தது. நேற்று காலை 8 மணியுடன் முடிந்த 24 மணி நேரத்தில் 23 மி. மீட்டர் மழை பெய்திருக்கிறது,

# சென்னை வெயில்

## வியாழன் பிற்பகல் 2 மணி

# 103.9 டிகிரி

# மின்சார வெட்டு 60 சதவிகிதமாக உடனே குறைப்பு

சென்னை, மே 15—தமிழ்நாட்டில் இப்பொழுது மின்சார வெட்டு 75 சதவிகிதத்திலிருந்து 60 சதவிகித மாக உடனடியாக குறைக்கப்படும் என்று உறுதியாக தெரிகிறது.

இதுபற்றிய அரசாங்க அறிக்கை இன்று மாலை வெளி யிடப்படும் என்று அரசாங்க உயர்தர அதிகாரி ஒருவர் இன்று காலை தெரிவித்தார்.

எண்ணூர் மின் நிலையத்தில் தற்போது சுமார் 51 லட்சம் யூனிட்டும் நெய்வேலி மின் நிலையத்தில் சுமார் 67 லட்சம் யூனிட்டுகளும் மின்சாரம் உற்பத்தியாகிறது.

தமிழ்நாட்டுக்கு சப்ளைசெய் யும் மின்சார அளவை கேரளா அரசு 15 லட்சம் யூனிட்டுகளிலிருந்து50 ஆயிரம் யூனிட்டுகளாகக் குறைந்திருக்கிறது.

மேற்கொண்டு நெய்வேலி, எண்ணூர் மின்சார நிலையங் களிலிருந்து கூடுதல் மின்சா ரம் கிடைக்க வழிவகை செய் யப்பட்டு வருகின்றது.

ஆகவே மின்வெட்டு அளவு 75 சதவிகிதத்திலிருந்து 60 சதவிகிதமாக குறைக்கப்படு கிறது. 60 சதவிகிதத்திற்கு மேல் மின்சாரம் செலவுசெய் பவர்களுக்கு உரிய கட்டணம் வசூலிக்கப்படுமே தவிர இணைப்பு துண்டிக்கப்பட மாட்டாது.

# கிணற்றில் தவறி விழுந்து சிறுவன் படுகாயம்

சென்னை, மே 15—விளையா டிக் கொண்டிருந்த சிறுவன் ஒருவன் கிணற்றில் தவறி விழுந்து படுகாயமடைந்தான்

சிறுவனின் பெயர் குமார் (வயது 11). மாம்பலத்தைச் சேர்ந்த கோவிந்தசாமி என்ப வரின் மகன்.

கிணற்றில் தண்ணீர் இல்லா ததால் குமாருக்கு பலத்த காயம் ஏற்பட்டது.

ராயப்பேட்டை ஆஸ்பத்தி ரியில் சேர்க்கப்பட்ட குமா ருக்கு சிகிச்சையளிக்கப்படு கிறது.

ஊதிய முடக்க சட்ட எதிர்ப்பு:

# தொழிலாளர் கண்டன நாள் ஊர்வலம், கூட்டம்

சென்னை, மே 15—ஊதிய முடக்கச் சட்ட எதிர்ப்புக்குழு வின் சார்பில் சென்னை நகர தொழிற்சங்கங்களின் தேசிய எதிர்ப்பு நாள் பொதுக் கூட் டம் இன்று (வியாழன்) திரு வல்லிக்கேணி படேல்சதுக்கத் தில் மாலை 7 மணிக்கு நடக்கும்.

தொழிலாளர் முன்னேற்ற சங்கப் பேரவை செயலாளர் காட்டூர் கோபால், கே. சுப்பு எம். எல். ஏ. ஆகியோர் கலந்துகொள்வார்கள்.

மாலை 5-15 மணிக்கு பாரி முனையிலிருந்தும், மத்திய நூலகக் கட்டிடத்திலிருந்தும் ஊர்வலங்கள் புறப்பட்டு படேல் சதுக்கத்திற்கு வந்து சேரும்,

# சென்னையில் காலரா ஆபத்து

சென்னை, மே 15— சென்னை நகரில் காலராநோய் பரவுவதற்கான நிலைமை ஏற் பட்டுள்ளதால் தண்ணீரைக் காய்ச்சிக் குடிக்கவேண்டும். மாநகராட்சி மருத்துவமனை களில் காலரா தடுப்பு ஊசி போடப்படும் என்றும் மாநக ராட்சி விசேஷ அதிகாரி அந்தோணி தெரிவித்தார்.

மாநகராட்சி லாரிகளில் இருந்து தண்ணீர் தரும்போது அதற்காக காசு பெற்றால் நட வடிக்கை எடுக்கப்படும் என் றும அந்தோணி நிருபர்களி டம் தெரிவித்தார்.

# மூட்டைப் பூச்சி மருந்து சாப்பிட்டு இளம் பெண் தற்கொலை

சென்னை, மே 15—மூட் டைப்பூச்சி மருந்து சாப்பிட்டு ஒரு இளம் பெண் தற்கொலை செய்து கொண்டாள்.

இவர் பெயர் கஸ்தூரி (வயது - 18) அபிராம புரம்,வாரன்ரோடில்வசிக்கும் பார்வதி என்பவரின் மகள். தந்தை இல்லை.

# பஸ்ஸில் இடம் கிடைக்க உயிரிழந்த சிப்பாய்

பம்பாய், மே 15—பஸ்சில் இடம் கிடைக்க முயற்சித்த ராணுவ வீரர் ஒருவர் தனது உயிரையே இழந்தார்.

கேசவகணபதிலாட் என்ற ராணுவ வீரர் ஊருக்குச் செல்லும் வழியில் பம்பாய் வந்தார். பம்பாயில் பஸ்சில் ஏற முயன்றபோது கால்தவறி கீழே விழுந்தார். விழுந்தவர் மீது பஸ் சக்கரம் ஏறியதால் படுகாயம் அடைந் தார். ஆஸ்பத்திரியில் அனு மதிக்கப்பட்டு அவர் மரண மடைந்தார்.

இந்த ராணுவ வீரரின் குடும்பத்துக்கு உதவிதொகை வழங்க ராணுவ அதிகாரி களின் மனைவியர் நடவடிக்கை எடுத்துள்ளனர்.

# 1500 லிட்டர் சாராயம் பறிமுதல்

சென்னை, மே 15— செங்கற்பட்டு மாவட்ட போலீஸ் அதிகாரி மு.சீனிவா சன தமது கோஷ்டியுடன் சென்று மாதவரத்தை அடுத்த கொடுங்கையூரில் 1500 லிட் டர் சாராயத்தைக்கைப்பற்றி னார்.

இது சம்பந்தமாக சுப்பிரமணியம் உட்பட 6 பேர் கைது செய்யப்பட்ட னர்.

இதே கோஷ்டியினர் திரு வொற்றியூரை அடுத்த காலடிப்பேட்டையில் பாப்பம் மாள் என்ற 38 வயது பெண் மணியைக் கைதுசெய்து 150 லிட்டர் சாராயத்தையும் கைப்பற்றினர்.

கருணாநிதியை எதிர்த்து

கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம்

# எம். ஜி. ஆர். கிளர்ச்சியில் புது காங்கிரஸ் சேருமா? பக்தவத்சலம் பேட்டி

சென்னை, மே 15— கருணாநிதியை எதிர்த்து அண்ணா தி. மு. கழகம் நடத்தவிருக்கும் கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டத்தில் புது காங்கிரஸ் கலந்து கொள் ளாது என்று முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் கூறினார்.

சென்னையில் இன்று நடந்த நிருபர்கள் கூட்டத்தில் அவர் பேசினார்.

பக்தவத்சலம் கூறியதா வது:—

கருணாநிதிக்கு கறுப்புக் கொடி காட்டுவது என்ற முடிவு எம்.ஜி.ஆரே எடுத்த முடிவு ஆகும். யாரையும் கலந்து அவர் முடிவெடுக்க வில்லை. ஆகையால் அதில் புது காங்கிரஸ் கலந்துகொள் ளாது. ஆயினும் எம். ஜி. ஆரின் முடிவு வரவேற்கத் தக்கதாகும்.

மற்ற மந்திரிகளுக்கு எல் லாம காட்டாமல் கருணா நிதிக்கு மட்டும காட்டுவது என்று அவர் முடிவுஎடுத்திருக் கிறார். அதற்குகாரணம, அவர் களுக்கு இடையே உள்ள தனிப்பட்ட விரோதமகூட காரணமாக இருக்கலாம,

## ஜெ. பி. எதிர்ப்பு ஆர்ப்பாட்டம்

ஜெயப்பிரகாசருக்கு நாங் கள் கறுப்புக்கொடி காட்டிய போது அதில் அ. தி. மு. க. வும் கலந்து கொண்டிருந்தால் அதிக பலன் கிடைத்திருக் கும.

மோகன்தாரியா வந்த போது கே. எஸ். ராமசாமி வரவேற்றது தனிப்பட்ட முறையிலானதாகும. அதில் தவறில்லை. ஆனால் ராதா கிருஷ்ணனும, சௌரிராஜ லும அறிக்கை விட்டதானது காங்கிரஸ்காரர் செய்யக் கூடியதல்ல.

## குழம்பியவர்கள் 3 பேர்

தமிழ்நாட்டில் ஜெயப்பிர காஷ் அலை இல்லை. அவர் குழப்பம் அடைந்திருக்கிறார்.

காமராசர், கருணாநிதி, ஜெயப்பிரகாசர் ஆகிய 3 பேர்தான் குழப்பம் அடைந் திருக்கிறார்கள் என்று பக்த வத்சலம் கூறினார்.

## செயற்கை மழை வெற்றிபெறாது

செயற்கை மழைத் திட்டம் வெற்றி பெறாது என்று பக்த வத்சலம் கருத்து தெரிவித் தார். அவர் கூறியதாவது:—

தமிழ் நாட்டில் 1½ கோடி ரூபாய் இதற்காக செலவு செய்யப்போவதாக பத்தி ரிகையில் பார்த்தேன். முன் னேறிய நாடுகளிலேயே இது வெற்றிபெறவில்லை. ஆகை யால் இந்தத் திட்டத்தை கைவிட்டுவிடலாம்.

அரிசி ஏற்றுமதி

பேர ஊழல் வழக்கு

## தஸ்தாவேஜு பரிசோதனை குறித்து 16-ம் தேதி விவாதம்

சென்னை, மே 15— அமைச்சர் ப. உ. சண்முகம் மீதான அரிசி ஏற்றுமதி பேர ஊழல் வழக்கு நேற்று ஒரு நபர் கமிஷன நீதிபதி டி. ராமப்பிரசாத ராவ் முன் விசாரணைக்கு வந்தது. கமிஷனிடம் தாக்கல் செய்யப்பட்டுள்ள தஸ்தாவேஜுகளை பரிசோதிக்க சம்பந்தப்பட்ட தரப்பினருக்கு உரிமை உண்டா என்ற பிரச்னை எழுப்பப்பட்டது.

விசாரணைக் கமிஷன் சட்ட விதிகளின்படி கமிஷன்தான் தஸ்தா வேஜுகளைப் பரிசோதித்து, எவை தேவை என்பதை முடிவு செய்ய முடியுமே யொழிய, வழக்கில் சம்பந்தப்பட்ட தரப்பினர் அப்படிச் செய்ய உரிமை இல்லை என்று சர்க்கார்வக்கீல் ஜி. ராமஸ்வாமி கூறினார். இது சம்பந்தமான சிவில் புரொசிஜர் கோடின் ஷரத்துகள் புதிதாகக் கண்டு பிடிப்பவைகளுக்குத்தான் பொருந்துமேயொழிய பரிசோதனை செய்வதற்குப் பொருந்தாது என்று அவர் சொன்னார்.

இது குறித்து 16-ந் தேதி பிற்பகல் விவாதிக்கலாம் என்று கூறி, நீதிபதி விசாரணையை ஒத்திவைத்தார்.

## இராக்குக்கு இந்திய விஞ்ஞானிகள்

பம்பாய், மே 15— இந்திய அணு விஞ்ஞானிகள் இராக்குக்கு செல்கின்றனர்.

இராக்கில் இவர்கள் அணுமின் உற்பத்தி நிலையங்களை ஏற்படுத்த உதவி செய்வர்.

இராக் விஞ்ஞானிகளுக்குப் பயிற்சியளிக்கவும்திட்டமிடப்பட்டுள்ளது.

திமு. க. அரசு மீது ஊழல் புகார்

# விசாரணை கமிட்டியை காமராஜர் அமைக்கலாமா? ஜெயப்பிரகாஷ் பேட்டி

**சென்னை, மே 15—தி.மு.க. அரசு மீது கூறப்பட்ட ஊழல் புகார்களை விசாரிக்க காமராஜர் முன்வந்து ஒரு கமிட்டியை அமைக்கலாமா என்பதுபற்றி "துக்ளக்" ஆசிரியர் "சோ"வுக்கு அளித்த பேட்டியில் ஜெயப்பிரகாஷ் கருத்து தெரிவித்தார்.**

'சோ' கேட்ட சில முக்கிய கேள்விகளும், ஜெயப்பிரகாஷ் அளித்த பதில்களும் பின்வருமாறு:—

சோ:—ஒரு அரசின் மீது இருக்கக் கூடிய ஊழல் குற்றச்சாட்டுகளைக் கோர்ட்டில் நிரூபிப்பது மிகவும் கடினமான காரியம் என்று ஒரு கூட்டத்தில் நீங்களே சொன்னீர்கள். அப்படியிருக்க, முதல்வரோடு அமர்ந்து விவாதித்தால் மட்டும் ஊழல் குற்றச்சாட்டுகளை நிரூபித்து விட முடியுமா?

ஜெ. பி:—நான் ஒன்று சொல்கிறேன்: ஆதாரம் இல்லாமல் ஊழல் இருக்கிறது ஊழல் இருக்கிறது என்று சொல்லிக் கொண்டிருப்பது மக்களின் நம்பிக்கைகளை எல்லாம் தளரச் செய்யும் காரியமாகிவிடும். இதை மறந்து விடக்கூடாது.

### விசாரணை கமிட்டி

சோ: நான் ஒரு வழிமுறையைச் சொல்கிறேன். பதவிக்கு வருவதற்கு முன்பாக — அதாவது 1967-க்கு முன்பாக தி. மு. க.வினரிடமும அவர்களுடைய உறவினர்களிடமும் இருந்த சொத்துக்களின் மதிப்பு என்ன என்பதைக் கணக்கெடுக்க வேண்டும். பிறகு இப்போது தி. மு. க. வினரிடமும், அவர்களுடைய உறவினர்களிடமும் இருக்கும் சொத்துக்களின் மதிப்பென்ன என்பதையும் கணக்கெடுக்கவேண்டும். எந்தவகையில் சொத்துக்கள் சேர்க்கப்பட்டன என்பதற்கு அவர்கள் பதில் சொல்லவேண்டும்.

இந்த விசாரணையை நடத்த மட்டும் ஒரு கமிட்டி அல்லது கமிஷன் நிறுவப்பட வேண்டும். இதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?

ஜெ. பி:—ஏற்றுக் கொள்கிறேன், ஆனால் எதிர்க்கட்சிகளோ அல்லது மக்களால் நியமிக்கப்படும் ஒரு கமிட்டியோ இம்மாதிரி விசாரணைக்கு ஏற்பாடு செய்ய முன்வர வேண்டுமே? அப்படி யாரும் தமிழகத்தில் முன் வருவதாகத் தெரியவில்லையே எனக்கு!

### இந்திராகாந்தி கூற ஆரம்பித்தால்.....

சோ:— தமிழக முதல்வர் எதிர்க் கட்சிகளுடன் பேச்சு வார்த்தைக்குத் தயாராக இருப்பதாகக் கூறிவிட்டார். அதனால் இயக்கம் நடத்துவதற்குமுன்பாகசிலவழிமுறைகளெல்லாம் கடைப்பிடிக்க வேண்டும்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். நான் ஒன்று கேட்கிறேன். திடீரென்று இந்திரா காந்தி 'நானும் என் அரசு மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுக்களைப் பற்றி எதிர்க் கட்சிகளுடன் பேசத் தயாராக இருக்கிறேன்!' என்று கூறி விடுகிறார் என வைத்துக் கொள்வோம். அப்போது அவருடைய ஆட்சியிடமும் உங்கள் இயக்கத்தால் இதே வழிமுறைகள் பின்பற்றப்படுமா?

ஜெ. பி:—பிரதம மந்திரி அவ்வாறு கூறவில்லையே?

சோ:—தேர்தல் முறைகள் சீர்திருத்தம் பற்றி மத்திய அரசு ஏற்கெனவே எதிர்க் கட்சிகளுடன் பேச்சு வார்த்தைகள் தொடங்கி இருக்கிறதே! உங்களுடைய மக்கள் இயக்கத்தின் கோரிக்கைகளில் ஒன்று தேர்தல் முறைகளில் சீர்திருத்தம் என்பதல்லவா?

ஜெ. பி:—மக்கள் இயக்கத்தில் வேறு பல கோரிக்கைகளும் இருக்கின்றன. அவற்றிற்கெல்லாம் மத்திய அரசு பேச்சு வார்த்தை நடத்தவில்லை.

### தப்ப வழியா?

சோ: தமிழகத்தில் இயக்கம் தொடங்காததற்குக் காரணம்—தமிழக முதல்வர் எதிர்க்கட்சிகளுடன் பேச்சு வார்த்தைகளுக்கு தயாராக இருப்பது—என்று நீங்கள் கூறிவிட்டீர்கள். இந்த இயக்கத்தின் விளைவுகளிலிருந்து தப்பித்துக்கொள்ள இப்படி ஒரு சுலபமான வழி இருக்கிறது என்று புரிந்துகொண்டு மற்ற மாநில முதல்வர்கள் ''நாங்களும் பேச்சுவார்த்தைகளுக்குத் தயார்' என்று கூறினால்..

ஜெ. பி:-இயக்கத்திலிருந்து தப்பித்துக் கொள்ள இது ஒரு வழி என்று நீங்கள் கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். உங்களுடைய முதல்வர் எதிர்க் கட்சிகளுக்கு அழைப்பு விடுத்திருக்கிறார். அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். குற்றச்சாட்டுகளைப்பற்றி விவாதிக்க வேண்டும். இதற்கு ஒரு கமிட்டி வேண்டுமானாலும் நியமிக்கலாம். இது தான் என்னுடைய கருத்து.

சோ:-அந்த முயற்சி பயன் அளிக்கவில்லை யென்றால் உங்களுடைய மக்கள் இயக்கம் இங்கும் ஆரம்பிக்கப்படும் என்று எடுத்துக் கொள்ளலாமா?

### குழப்புகிறது

ஜெ. பி: ஆமாம். தி. மு. க. ஊழலில்லாத அரசு என்று நான் நற்சாட்சிப் பத்திரம் கொடுத்துவிடவில்லை. ஆனால் தமிழகத்தின் அரசியல் நிலை என்னைக் குழப்புகிறது. சிலர் தி. மு. க. ஆட்சியை எதிர்க்கிறார்கள், சிலர் ஆதரிக்கிறார்கள். அ. தி. மு. க., தி. மு. க.வின்மீது சில குற்றச்சாட்டுக்களைக் கூறி எனக்கு எழுதியிருக்கிறது. புரட்சி அ. தி. மு. க. அவையெல்லாம் தவறு என்று கூறி அ. தி. மு. க.வின்மீது குற்றம் சாட்டுகிறது.

சோ: புரட்சி அ.தி.மு.க. என்பது வெறும் காகிதத்தில்-பெயரளவில்—இருக்கும் கட்சிதானே?

ஜெ. பி:- இருக்கலாம், எனக்குத் தெரியாது. ஆனால் தமிழக முதல்வரின் நிலைமற்ற மாநில முதல்வர்களிடமிருந்து மாறுபட்டு இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. அதனால்தான் இங்கு உடனே இயக்கம் ஆரம்பிப்பது முறையாக இருக்குமா என்று நான் யோசிக்க வேண்டியிருக்கிறது.

### தி. மு. க. அரசை ஆதரிக்கிறீர்களா?

சோ:—பீகாரில் இயக்கத்திற்கு ஆதரவு இருந்தது என்பதைக் காட்டுவதற்காக நீங்கள் 20 லட்சம் மக்கள் கையெழுத்திட்ட செய்தியைக் கூறினீர்கள். அதனால்தான் இங்கு 10 ஆயிரம் மக்களே கூடிய உங்கள் கடற்கரை பொதுக் கூட்ட நிகழ்ச்சியை நான் எடுத்துக் காட்டினேன். அதற்குக் காரணம் தி. மு. க. அரசை நீங்கள் ஆதரிப்பதாக மக்களிடையே இருக்கும் அபிப்பிராயம் என்பதையும் கூறினேன். தவறு இருந்தால் மன்னியுங்கள்.

ஜெ. பி:—என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? தமிழக முதல்வரை நான் சந்தித்தது தவறா? இல்லை, சென்னையில் ராஜாஜி நினைவாலயத் திறப்பு விழாவில் பங்கேற்றது தவறா?

சோ:—அப்படியெல்லாம் நான் கூறவேயில்லை. தமிழக மக்களின் நினைப்பை உங்களுக்குத் தெளிவாக்க விரும்பினேன — அவ்வளவு தான். தி. மு. க. மீதோ மற்ற எந்த அரசியல் கட்சியின் மீதோ எனக்கு சொந்த விருப்பு—வெறுப்புகள் கிடையாது. சொல்லப்போனால் இன்று இருக்கும் அரசியல் வாதிகளில எனக்கு மிகவும் தெரிந்தவர் கருணாநிதிதான்.

ஆனால் நட்பு வேறு. அரசியல் விமரிசனம வேறு. நீங்களும்கூட இப்போது சில விஷயங்களைக் கூறினீர்கள். தி.மு.க. வினரின் முந்தைய, இப்போதைய சொத்து விவரங்கள் பற்றி விசாரணை நடத்த ஒரு கமிட்டி அல்லது கமிஷன நியமிக்கலாம் என்ற வழியை ஏற்றுக்கொள்வதாகக் கூறினீர்கள். அதற்குப் பிறகு இயக்கம் ஆரம்பித்தால் நியாயம் இருக்குமென்றும் கூறினீர்கள். இதுவே ஓரளவு நிலையை தெளிவாக்குகிறது என்று நினைக்கிறேன்.

ஜெ.பி: ஆம் அதுவும் ஒரு வழிதான். ஆனால் இந்தக காரியங்களை யார் எடுத்து நடத்துவது? அதற்கு யாரும் இங்கு தயாராக இருப்பதாக தெரியவில்லையே?

### காமராஜர்

சோ:— ஏன், காமராஜ் செய்யமுடியாதா? உங்களுடைய தமிழக விஜயத்தில் நேரடியாகச் சம்பந்தப்படாத

இன்றைய நிலையில் அவர் தான் பொருத்தமாக இருந்திருப்பார்.

ஜெ. பி: நான் அவரைத் தடுக்கவில்லையே! அவர்நேரடியாக சம்பந்தப்படாத பொழுது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?

## ரெயில் விபத்து: விசாரணை கமிட்டி அமைக்க கோரிக்கை

புதுடெல்லி, மே 15—ரெயில்வேக்களில் சமீபத்தில் நடந்த விபத்துகளைப் பற்றி கண்டறிய விசாரணைக் கமிட்டி ஒன்றை உடனடியாக நியமிக்க வேண்டும் என்று அகில இந்திய ரெயில்வே தொழிலாளர் சம்மேளன தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் கூறியுள்ளார்.

ரெயில்வேக்களில்விபத்துகள் அதிகரித்து வருவது பற்றி ரெயில்வே தொழிலாளர் சம்மேளனம் கவலை கொள்வதாகவும், விசாரணைக் கமிட்டி அமைக்கும் கோரிக்கையை ரெயில்வே நிர்வாக அதிகாரிகள் ஏற்றுக் கொள்வதில்லை என்று குறை கூறியும் ரெயில்வே அமைச்சர் கமலபதி திரிபாதிக்கு சம்மேளனத் தலைவர் பெர்னாண்டஸ் ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

பாட்னா அருகே உள்ள தானாபூரில் நடந்த ரயில் விபத்து சம்பந்தமாக தண்டிக்கப்பட்ட 4 ரெயில்வே தொழிலாளர்களை ரெயில்வே நிர்வாகம் பாதுகாக்க வேண்டும் என்று பெர்னாண்டஸ் அந்தக்கடிதத்தில்கோரியுள்ளார்.

## பல்கலைகழகத்தில் வெடிகுண்டு வீச்சு

அலகாபாத், மே 15— அலகாபாத் பல்கலைக் கழகத்தில் திடீரென்று வெடிகுண்டு வெடித்தது. இதனால் ஆள் சேதம் எதுவும் இல்லை.

பல்கலைக்கழக செனட் கட்டிடத்தில் இருக்கும் துணை வேந்தர் அலுவலகம் நோக்கி இரண்டு வெடிகுண்டுகள் வீசப்பட்டன. வெடிகுண்டுகள் அலுவலகச்சுவரில் மோதி விழுந்தன.

துணைவேந்தர் அப்போது அலுவலகத்தில் இல்லை.

வெடிகுண்டு வெடித்த போது சில மாணவர் தலைவர்களை துணைவேந்தர் 'சஸ்பெண்டு'செய்ததைகண்டித்து அப்போது கூட்டம் ஒன்றை பல்கலைக் கழகத்துக்கு அருகில் மாணவர்கள் நடத்திக் கொண்டிருந்தனர்.

"உற்பத்தி திட்டங்கள் சரிவர செயல்படவில்லை"

## தி.மு.க. அரசுமீது காமராஜர் குற்றச்சாட்டு

**ஊட்டி, மே 15—தி. மு. க. ஆட்சியில் உற்பத்தி பெருக்க திட்டங்கள் சரிவர செயல்படவில்லை என்று காமராஜர் புகார் கூறினார்.**

ஊட்டி அருகே நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் காமராஜர் பேசினார்.

அவர் கூறியதாவது:—

காந்திஜியின் தலைமையில் துன்பதுயரங்களையும் வேதனைகளையும் அனுபவித்து சுதந்திரம் பெற்றோம. 27 ஆண்டுகள் ஆகியும் இன்னும் பொருளாதார சுதந்திரம கிடைக்கவில்லை. நாடு பூராவும் ஏமாற்றமும விரக்தியும் காணப்படுகிறது. எந்த ஒரு அரசியல் கட்சியைச் சேர்நதவராக இருந்தாலும் தற்போது தேசிய ஒழுக்கமும், ஒருமைப்பாட்டு உணர்வும் இல்லாத நிலையைத் தான் காண முடிகிறது.

தமிழ்நாட்டில் தி. மு. க. ஆட்சி ஏற்பட்டது நமது துரதிர்ஷ்டம். நேர்மை, நாணயம், உண்மை எதுவும் இல்லாத ஒரு கட்சி தன்னை வளப்படுத்திக் கொள்வதையே நோக்கமாகக்கொண்டு ஆட்சி நடத்தி வருகிறது.

மக்களுக்கு நன்மை செய்வதாக பெரிய பெரிய விளம்பரங்களைப்போட்டுபணத்தை வீணடிக்கிறார்கள். உற்பத்தி பெருக்க திட்டங்கள் சரிவர செயல்படவில்லை.

காங்கிரஸ் ஆட்சி காலத்தில் பட்டம் பெற்று அல்லது எஸ். எஸ். எல். சி. தேறி சிறிது காலத்துக்குள் வேலை கிடைத்துவிடும். ஆனால் இப்போது வருஷக் கணக்காகக் காத்திருந்தாலும் வேலை கிடைப்பதில்லை. இது எப்போது பயங்கரமாக வெடித்துச் சிதறும் என்ற அச்சம் ஏற்பட்டுள்ளது. இந்த நிலைமையை மாற்றுவதற்கு மக்களால்தான்முடியும்என்று காமராஜர் கூறினார்.

## கட்டணக் குறைப்பு: மதுபர்மிட் மனுக்கள் இரட்டிப்பு

சென்னை, மே 15—மதுபானபர்மிட்பெறுவதற்கான கட்டணம் 500ரூபாயிலிருந்து 100 ரூபாயாகக் குறைக்கப்பட்டதிலிருந்து மது பர்மிட் கோரி விண்ணப்பம் செய்வோரின் எண்ணிக்கை இரு மடங்காகப் பெருகி உள்ளது.

பர்மிட் பெறுவதற்கான விண்ணப்ப பாரங்களுக்கு ஏக கிராக்கி உள்ளதால் ஒருவருக்கு ஒரு மனு என்று மது விலக்கு ஆயத்துறை விநியோகிக்கிறது.

மதுபான பர்மிட் கட்டணம் 500 ரூபாயாக இருந்த போது 3 ஆயிரத்துக்கு சற்றுக் கூடுதலான பர்மிட்டுகள் வழங்கப்பட்டிருந்தன. இந்த தொகை நூறாகக் குறைக்கப்பட்ட பிறகு 5 ஆயிரம் விண்ணப்ப பாரங்கள் வரை வாங்கிச் சென்று விட்டார்கள் என்று மதுவிலக்கு ஆயத்தீர்வை துறையைச் சேர்ந்த ஒரு அதிகாரி தெரிவித்தார். விண்ணப்ப பாரங்களை அச்சிட்டு வழங்குமாறு அரசாங்க அச்சகத்திற்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

மதுபான பர்மிட் கட்டணம் குறைக்கப்பட்டுள்ளதால் முன்பு ரூ. 500 செலுத்தியவர்கள் மீதத் தொகையைத் திரும்பப்பெற மது விலக்கு கமிஷனருக்கு முழு விவரங்களுடன் எழுத வேண்டும் என்றும் அவர் கூறினார்.

## சிக்கிம் புதிய கவர்னர் நியமனம்

புதுடெல்லி, மே 15—சிக்கிமில் இந்திய அரசால் தலைமை நிர்வாகியாக நியமிக்கப்பட்ட பி. பி. லால் அந்த மாநில கவர்னராக நியமிக்கப்படுவார். அவர் இந்த மாதம் 16ம்தேதி பதவி பிரமாணம் எடுத்துக் கொள்வார் என்று தெரிகிறது.

சிக்கிமை இந்தியாவின் மாநிலமாக்கும் மசோதாவை நாடாளுமன்றம் நிறைவேற்றியது. இதுவரை 13 மாநிலங்கள் இந்த மசோதாவை அங்கீகரித்துள்ளன. இந்த மாதம் 16-ந் தேதி ஜனாதிபதி சிக்கிம் மசோதாவிற்கு ஒப்புதல் அளிப்பார்.

டெல்லி உயர்நீதிமன்ற நீதிபதி ராஜேந்திரசாசர் சிக்கிம் மாநில நீதிபதியாகவும் தற்காலிக தலைமை நீதிபதியாகவும் பணியாற்ற சிக்கிமிற்கு மாற்றப்பட்டுள்ளார்.

சிக்கிமின் புதியகவர்னருக்கு நீதிபதி சாசர் பதவிப் பிரமாணம் செய்து வைப்பார்.

சிக்கிமில் அரசியல் அதிகாரி அலுவலகம் கலைக்கப்பட்டு அரசியல் அதிகாரி குருபச்சன் சிங் புதுடெல்லி திரும்புவார்.

அரசியல் அதிகாரியின் இருப்பிடம்கவர்னர் மாளிகையாக மாற்றப்படும்.

## தஞ்சையில் ஐஸ் கட்டி மழை

தஞ்சை, மே 15— தஞ்சையில் நேற்று ஐஸ்கட்டி மழை பெய்தது.

மதியம் வரையில் வெய்யில் கடுமையாகவே இருந்தது. மாலை 4 மணி முதல் 5 மணி வரை இடி மின்னலுடன் பலத்த மழை பெய்தது. 15 நிமிடங்கள்வரை ஐஸ்கட்டி மழை பெய்தது.

சிறுவர்களுக்கு அப்போது கொண்டாட்டமாகஇருந்தது மழையில் நனைந்தவாறு ஓடிச் சென்று அவர்கள் ஐஸ்கட்டிகளை எடுத்துச் சாப்பிட்டார்கள்.

நெடுஞ்செழியன் பேட்டி

## வேலைவாய்ப்பு அளிக்கும் புதியதுறைகளில்படிப்பு: கல்லூரிகளில் ஆரம்பம்

சென்னை, மே 15—வேலை வாய்ப்பு அளிக்கும் வகையில் கல்லூரிகளில் இந்த ஆண்டு முதல் புதிதாக 12 துறைகளுக்கான வகுப்புக்கள் துவங்கப்படும் என்று அமைச்சர் நெடுஞ்செழியன் கூறினார்.

நேற்று நிருபர்களுக்கு பேட்டியளித்து அவர் கூறியதாவது:—

அரசு கல்லூரிகள், தனியார் கல்லூரிகள் ஆகிய அனைத்திலும் 12 புதிய துறைகளில் வகுப்புகள் துவங்கலாம் என பல்கலைக்கழகம் ஒப்புதல் வழங்கியுள்ளது. இதனைத் தொடர்ந்து தேவைப்படும் கல்லூரிகளில் ஏற்கனவே உள்ள பாடத்திட்டத்தின அடிப்படையில் கூடுதல் பிரிவுகள் துவங்குவதற்குப் பதிலாக 12 புதிய துறைகளில் வகுப்புகள் வழங்கப்பட்டுள்ளது.

சத்துணவு, பதப்படுத்தப்பட்ட உணவு வகை தயாரித்தல் வீடு, சுற்றுப்புறம், உள் அலங்காரம், மக்கள் தொடர்பு போன்றவை இந்த 12 புதியபடிப்புத் துறைகளில் குறிப்பிடத் தக்கவை ஆகும்.

நடப்பு ஆண்டில் அரசுத் துறையில் புதிய கல்லூரிகள் எதுவும் துவங்குவதாக இல்லை தனியார் கல்லூரிகள் மூன்று அல்லது நான்கு ஏற்படலாம். உயர்நிலைப்பள்ளிகளைப் பொறுத்தவரையில் 40 முதல் 50 புதிய உயர்நிலைப்பள்ளிகள் துவக்கப்படலாம்.

### பி. காம் கூடுதல் வகுப்புகள்

மருத்துவக் கல்லூரிகளுக்கு அடுத்தபடியாக பி. காம். வகுப்புகளில் சேர அதிக கிராக்கி உள்ளதால், இந்த ஆண்டு ஒவ்வொரு கல்லூரியிலும் கூடுதலாக ஒரு பி. காம் வகுப்பு ஏற்படுத்த அனுமதி வழங்கப்படுமா என்று அமைச்சரிடம் கேட்கப்பட்டது.

இதற்கு அனுமதி வழங்குவதில் சிரமமோ தடையோ இல்லை. எம். காம். படித்தவர்கள்ஆசிரியர்களாகபயிற்றுவிக்கக் கிடைக்காத காரணத்தாலேயே சிரமம் ஏற்படுகிறது. எம். காம் படித்த ஆசிரியர்கள் கிடைப்பதைப் பொறுத்து கூடுதலாக பி. காம் வகுப்புகளை ஆரம்பிக்க ஏற்பாடு செய்யப்படும் என்று நெடுஞ்செழியன் சொன்னார்

## விலைவாசி உயருகிறது

புதுடெல்லி, மே 15— 6 மாதங்களாகக் குறைந்து கொண்டே வந்த மொத்த விலைவாசிகள் ஏப்ரல் 12-ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 0.5 சதவிகிதம் கூடின.

மத்திய நிதி இலாகா வெளியிட்டுள்ள அறிக்கை மேற்கண்டவாறு கூறுகிறது.

உணவுப் பொருள்கள், தொழிற்சாலை கச்சாப் பொருள், தொழிற்சாலை உற்பத்திப் பொருள்கள் ஆகியவைகளின் விலைகள் உயர்ந்ததே இதற்குக் காரணம். உணவுப் பொருள்களின் மொத்த விலைகள் மட்டும் 0.7 சதவிகிதம் உயர்ந்தன என்று அவ்வறிக்கை கூறுகிறது.

## சுற்றுலா பயணிகள் வருகை குறைவா?

தமிழ்நாட்டில் மீண்டும் மதுவிலக்கு அமுல்படுத்தப் பட்டதால் சுற்றுலாப் பயணிகள் வரத்து குறைந்துவிட்டது என்று சொல்லப்படுவது சரியல்ல. வெளிநாடுகளிலிருந்தும், வெளி மாநிலங்களிலிருந்தும் இங்கு வரும் சுற்றுலாப் பயணிகளின் வசதிக்காக மதுபான பெர்மிட் பெறும் முறை இலகுவாக்கப்பட்டுள்ளது என்றும் அவர் கூறினார்.

## அமெரிக்கா தாக்குதல்: கம்போடிய பீரங்கி படகுகள் நாசம்

**வாஷிங்டன், மே 15—கம்போடியாவின் 3 பீரங்கிப் படகுகளை அமெரிக்க விமானப் படையினர் நேற்று மூழ்கடித்தனர். வேறு 4 படகுகளுக்கு சேதத்தையும் ஏற்படுத்தினர்.**

அமெரிகக வர்த்தக கப்பல் ஒன்றை கம்போடியா பிடித்து வைத்திருந்தது அல்லவா? இந்தகப்பலிலிருந்த மாலுமிகளை வெளியேற்ற கம்போடியா முற்பட்டதாகவும், இதைத் தடுக்கவே அமெரிக்க கடற்படையினர் தாக்குதலில் ஈடுபட்டதாகவும் அமெரிக்க ராணுவத் தலைமை கூறியது.

கம்போடியாவின் நடவடிக்கையை அமெரிக்கா எச்சரித்ததாகவும், எச்சரிக்கை பலனளிக்காமல் போகவே தாக்குதலை நடத்தியதாகவும் அமெரிக்கா கூறியது.

முதலில் கம்போடிய படகுகள் சுட ஆரம்பித்த பிறகே, அமெரிக்க கடற்படை நடவடிக்கையில் இறங்கியதாம்.

### மத்தியஸ்தத்துக்கு சீனா மறுப்பு

அமெரிக்கக் கப்பலை விடுவிக்க உதவி செய்யுமாறு சீனாவை அமெரிக்கா கேட்டிருந்தது. அமெரிக்காவின் இநத முயற்சி பயனளிக்கவில்லை என்று தெரிகிறது.

மூழ்கடிக்கப்பட்ட கம்போடிய படகில் இருந்த மாலுமிகளின் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை. இந்த மாலுமிகளை மீட்க அமெரிக்க ஹெலிகாப்டர்கள் முயன்றதாகவும், ஆனால் கம்போடிய படகுகள் பீரங்கியால் சுட ஆரம்பித்ததால் மீட்பு முயற்சி கைவிடப்பட்டதாகவும்கூறப்படுகிறது.

## தாய்லாந்து கண்டனம்

அமெரிக்க கடற்படையினர் திடீர் என்று தாய்லாந்தில் வந்திறங்கியதற்கு தாய்லாந்து அரசு அமெரிக்காவுக்கு கடும் கண்டனத்தை தெரிவித்திருக்கியது.

அமெரிக்க துருப்புகள் உடனே தாய்லாந்தை விட்டு வெளியேறவில்லை யென்றால் கடும் விளைவுகள் ஏற்படும் என்றும் தாய்லாந்து எச்சரித்தது.

இந்த எச்சரிக்கைக்கு பிறகு அமெரிக்ககடற்படை துருப்புகள் தாய்லாந்தை விட்டு வெளியேறி போர்க் கப்பலுக்கே திரும்பியதாக அறிவிக்கப்படுகிறது.

## "கழுதைப்புலி" கைது

பிரதாப்காச் (மகாராஷ்டிரம், மே 15—கழுதைப் புலித்தோலை அணிந்து கொண்டு பல குழந்தைகளை கொன்றதாகக் கூறப்படும் வாலிபரை போலீசார் கைது செய்தனர். கழுதைப் புலித்தோலை உடம்பில் போர்த்திக் கொண்டு புலிபோல் இந்த ஆசாமி குதித்து குதித்துச் செல்வாராம். அவரை வேடிக்கைப் பார்ப்பதற்கு குழந்தைகள் கூடுவர. உடனே அந்த நபர் குழந்தைகளைப் பிடித்து 'சிரிஞ்' ஒன்றினால் குழந்தைகள் ரத்தத்தை உறிஞ்சி எடுத்துவிடுவாராம். இதனால் பல குழந்தைகள் இறந்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. உறிஞ்சி எடுக்கப்பட்ட ரத்தத்தை இந்த ஆசாமி விற்றுவிடுவாராம்.

பிரதாப்காட் ரயில்வே நிலையத்தில் பெண்மணி ஒருவரின் மடியில் உட்கார்ந்திருந்த பெண் குழந்தை ஒன்றை பிடித்து தூக்க முயன்றார் இந்த ஆசாமி. அந்த பெண்மணி சத்தம் போடவே அருகில் இருந்தவர்கள் ஓடிவந்து அவரைப் பிடித்து போலீசில் ஒத்படைத்தனர்,

அவரை போலீசார் கோர்ட்டுக்கு கொண்டு வந்தபோது ஏராளமான மக்கள் கோர்ட் வாசலில் கூடி வேடிக்கை பார்த்தனர்,

# தஞ்சைக் கோர்ட்டில் எம். ஜி. ஆர்.

தஞ்சை, மே 15—வாக்காளர் பேரணி தொடர்பாக தஞ்சாவூர் திமுகழக எம்எல்ஏ நடராஜன் தொடுத்த வழக்கு விசாரணை சம்பந்தமாக அ. தி. மு. கழக பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். தஞ்சை நீதிமன்றத்தில் ஆஜரானார்.

நீதிமன்றத்தில் நீதிபதி கேட்ட கேள்விகளுக்கு எம். ஜி. ஆர். பதிலளித்தார்.

வழக்கில் குற்றம் சாட்டப்பட்டிருக்கும் அ. தி. மு. க. அமைப்புச் செயலாளர் கே. ஏ. கிருஷ்ணசாமியும் நீதிமன்றத்துக்கு வந்திருந்தார்.

இந்த வழக்கு தஞ்சை முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. வழக்கு விசாரணை 22-ம் தேதிக்கு தள்ளி வைக்கப்பட்டது.

மந்திரி எச்சரிக்கை

# காங்கிரஸ் கட்சியில் ஊழல்

பாலக்காடு, மே 15—ஊழல்மிக்க புதுகாங்கிரசார் மீதுகடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று மத்திய தொழில் இலாகா ராஜாங்க மந்திரி மௌரியா எச்சரித்தார். ஒட்டபாலத்தில் ஜில்லா புதுகாங்கிரஸ கூட்டத்தை இவர் துவக்கி வைத்துப் பேசினர். புது காங்கிரஸில் உள்ள அனைவரும் ஊழலுக்கு அப்பாற்பட்டவர்கள் என்றுதான் கூறவில்லைஎன்றார். ஜெயப்பிரகாஷ் நாராயணனை பின்பற்றுபவர்களில் பெரும்பாலோர் 'ஊழலின் இருப்பிடம்' என்றார். எந்த கட்சியும் எந்த தலைவரும் புது காங்கிரஸ், இந்திரா காந்தியின் இடத்தை நிரப்ப முடியாது என்றார்.

இந்திரா காந்தி மேலும் பத்து ஆண்டுகள் பதவியில் இருந்தால தற்போது உலக நாடுகளில் ௦-வது ஸ்தானம் வகிக்கும் இந்தியா 3-வது நாடாக முன்னேறிவிடும் என்றார். கேரள பிரதேச புது காங்கிரஸ் தலைவர் ஏ. கே. அந்தோணி மற்றும் பலர் பேசினர்.

## நாளைய நிகழ்ச்சி

திருமயிலை அருள்மிகு வெள்ளீசுவரர் திருக்கோயில் வைகாசிப்பெரு விழா, கொடியேற்றம், பவழக்கால்விமானம் காலை 6 மணி, குருந்த விருட்சத்தின் அடியில் சுக்கிரர் சிவபூஜாகாட்சி இரவு 9-30 மணி. தென் மாட வீதி, மயிலை.

# மந்திரி ராசாராமிடம் விம்கோ தொழிலாளர் அளித்த மகஜர்

சென்னை, மே 15—விம்கோ தொழிலாளர்களின் கோரிக்கைகள் சம்பந்தமாக சமரசம் ஏற்படுத்திக் கொடுக்கும்படி கோரி தொழிலாளர் நல அமைச்சர் ராசாராமிடம் விம்கோ தொழிலாளர்கள் சார்பில் நேற்று மகஜர் கொடுக்கப்பட்டது.

விம்கோ தொழிலாளர் சங்கத் தலைவர் எஸ். எம். நாராயணன் இந்த மகஜரை மந்திரியிடம் கொடுத்தார்.

மகஜரில் கூறப்பட்டதாவது:—

சென்னையிலுள்ள விம்கோ தொழிற்சாலைத் தொழிலாளர்கள் கடந்த ஏப்ரல் 4-ந் தேதியிலிருந்து வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

கம்பெனியைச் சேர்ந்த இதர தொழிற்சாலைத்தொழிலாளர்கள் மார்ச் 15 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

## கோரிக்கைகள்

1. நாடு முழுதும் உள்ள எல்லா விம்கோ தொழிற்சாலைகளிலும் ஒரே மாதிரி சம்பளம்—பஞ்சப்படி தரப்படவேண்டும.

2. உற்பத்தி போனஸ் திட்டம் அமுலுக்குக்கொண்டு வரப்பட வேண்டும்.

3. எல்லா தொழிலாளர்களுக்கும் வீட்டுவசதி ஏற்பாடு செய்யவேண்டும். அதுவரை வீட்டுவாடகை தர வேண்டும்.

4. கேஷுவல் தொழிலாளர் நிரந்தரம் செய்யப்பட வேண்டும்.

5. 20 சதவீதம் போனஸ் தரப்பட வேண்டும்.

மேலே கண்ட கோரிக்கைகளை சம்மேளனம் மூலம் சமர்ப்பித்தோம். எந்தவித நியாயமான முடிவிற்கும் கம்பெனி நிர்வாகம் வாராததால் வேலை நிறுத்தம் ஏற்பட்டது.

பல மாகாணங்களில் உள்ள தொழிலாளர்களுக்கு ஏக காலத்தில் பேசி முடிக்க வேண்டியிருப்பதால் மத்திய அரசு தொழிலாளர் நல அமைச்சரை தலையிட்டு முடித்துத் தருமாறு வேண்டினும்.

இந்தப் பிரச்னையில் தாம் தலையிட அதிகாரம் இல்லை என்றும், மாநில அரசாங்க தொழிலாளர் நல அமைச்சர் கேட்டுக்கொண்டால் தலையிட முடியும் என்றும், மத்திய அமைச்சர் கூறிவிட்டார.

சம்மேளனம் சமர்ப்பித்த கோரிக்கைகளின் பேரில் தாங்கள் ஒரு முடிவு ஏற்படுத்திக் கொடுத்தாலும், அல்லது மத்திய அமைச்சரைத் தலையிடுமாறு கேட்டுக் கொண்டாலும் மிகவும் நன்றியுள்ளவர்களாக இருப்போம் என்று மகஜரில் கூறப்பட்டது.

குஜராத்தில்

# என். ஜி. ஓ. ஸ்டிரைக் நடந்தாலும் தேர்தல்

ஆமதாபாத், மே 15—குஜராத் என். ஜி. ஓ வினர் வேலை நிறுத்தம் செய்தாலும் தேர்தல்கள் குறித்த நாட்களில் நடைபெறும் என்று தேர்தல் கமிஷனர் பி, சாமிநாதன் தெரிவித்தார்.

ஜூன் 8, 11 ஆகிய இரு தேதிகளிலும் வாக்குப் பதிவுக்காக 19,000 வாக்குப் பதிவு நிலையங்கள் அமைக்கப் படும். அத் தேதிகள் ஒவ்வொன்றிலும் தேர்தல்களை மேற்பார்வை செய்வதற்காக சுமார் 50,000 அதிகாரிகளும் மற்ற ஊழியர்களும் ஈடுபடுத்தப்படுவார்கள் என்று அவர் கூறினர்.

மாநில அரசு ஊழியர்கள் அறிவித்துள்ளபடி ஜூன் 3-ம் தேதியில் இருந்து அவர்கள் வேலை நிறுத்தம் நடைபெற்றாலும், குஜராத் தேர்தல்கள் மேற்கண்ட தேதிகளில் குறிப்பிட்டபடி நடக்கும் என்று அவர் கூறினர்.

குஜராத் அசெம்பிளி தேர்தலுக்காக அரசாங்கத்துக்கு சுமார் ரூ. 1,75 கோடி செலவாகும் என்று அவர் கூறினர்.

மேற்கண்ட இரண்டு நாட்களிலும் மழை பெய்தாலும் தேர்தல் நடக்கும் என்று அவர் கூறினர்.

தற்போதுள்ள தேர்தல் முறையில் தில்லுமுல்லுகள் செய்வது சாத்தியமே இல்லை என்றும் அவர் கூறினர்.

மக்கள் சபைக்கான இடைக்கால தேர்தல்கள் இனிமேல் நடக்காது என்றும் சாமிநாதன் தெரிவித்தார்,

பொதுத் தேர்தலுக்கு இன்னும் 8 மாதங்களே இருப்பதால் இந்த முடிவு மேற்கொள்ளப் பட்டதாக அவர் தெரிவித்தார்.

## இன்றைய சினிமா

சென்னை
ராம் — மந்திரி குமாரி
நியு எல்பின்ஸ்டன் — அரைக்கள்ளன் முக்கால்கள்ளன்
நேஷனல — பணத்தோட்டம்
சரஸ் — அவள் ஒரு தொடர் கதை

பல்லாவரம்
லக்ஷ்மி — மேல்நாட்டு மருமகள்

குரோம்பேட்டை
வெற்றி: அவன்தான் மனிதன்

தாம்பரம்
எம். ஆர். தியேட்டர் — "நெஞ்சம் மறப்பதில்லை"
நேஷனல் — நினைத்ததை முடிப்பவன்
ஸ்ரீ சித்ரா — தெய்வ மகன்

வில்லிவாக்கம்
ராயல்: மேல்நாட்டு மருமகள்

கொளத்தூர்
ஸ்ரீ குமரன் — பூந்தன் சிந்துதே வானம்

# மர்மத்தீவு மன்னன் படுகொலை

சென்னை, மே 15—மர்மத்தீவு மன்னன் என்று கூறப்படும் பரசுராம்பிரபு நேற்று பயங்கரமாகப் படுகொலை செய்யப்பட்டார்.

திருவொற்றியூரை அடுத்த புழுதிவாக்கத்தில் இந்தச் சம்பவம் நேற்று நடந்தது.

கத்தி, அரிவாள் போன்ற பயங்கர ஆயுதங்களுடன், தம்பி ரெட்டி என்பவரும் அவரது மகனும்வேலையாளும் அவரது உறவினர்களுமாக மொத்தம் சுமார் 30 பேர்கள் பரசுராம்பிரபுவைத் தாக்கியதாகவும், படுகாயமடைந்த அவர் சுருண்டுவிழுந்து மரணமடைந்ததாகவும் போலீசார் கூறினர்கள். இந்தச் சண்டையில் மேலும் ஐவர் காயமடைந்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

இந்தச் சண்டைக்கு பழைய விரோதமே காரணம் என்று போலீசார் கூறினர்கள்

சமீபத்தில் தமிழக சட்ட சபையில், பார்வையாளர் காலரியில் தனது குடும்பத்தாருடன் வந்திருந்து துண்டுப் பிரசுரங்களை சபைக்குள் "மர்மத் தீவு மன்னன்" வீசியதும் அதனுல் அவருக்கு 15நாள் ஜெயில் தண்டனையை சபாநாயகர் விதித்ததும் நினைவிருக்கலாம்.

தமிழ் நாட்டில் வெப்பம்

## 100 டிகிரியை தாண்டிய நகரங்கள்

| நகரம் | டிகிரி |
|---|---|
| கள்ளக்குறிச்சி | 105.8 |
| காரைக்குடி | 104 |
| மதுரை | 104 |
| நாகப்பட்டினம் | 102.2 |
| பாளையங்கோட்டை | 105.8 |
| சேலம் | 102.2 |
| திருப்பத்தூர் | 102.2 |
| வேலூர் | 107.6 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, மே 15—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 582 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 55 00

**வெள்ளி**

பார்வெள்ளி (1 கி. கி.) ரூ. 1085 00
உள்ளூர் 1080 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 95

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி மொத்த விலை 260 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 727 00
சில்லரை விலை ரூ. 8 10

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 440 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 77 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 157 00
முதல் ரூ. 158 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 154 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 50

**கடலைப்பிண்ணாக்கு**

70கி.கி.கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 69 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 483 00
முதல் ரூ. 490 00

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், மே 14—
ஆரம்ப விலை 46·05
முடிவு விலை 44·81

# "அ. தி. மு. க. வுக்கு நெடுஞ்செழியன் தூது:" ஹாண்டே பேச்சு

சென்னை, மே 15—அ. தி. மு. க வில் சேருவதற்காக நெடுஞ்செழியன் தூது அனுப்பினுர் என்று ஹாண்டே கூறினர். ஆனல் அவரை எம். ஜி. ஆர். சேர்த்துக்கொள்ளமாட்டார் என்றும் ஹாண்டே பேசினர்.

ராயப்பேட்டையில் நேற்றிரவு அ. தி. மு. க. பொதுக் கூட்டம் நடைபெற்றது. தனபால் தலைமை வகித்தார்.

இதில் கலந்து கொண்டு அ. தி. மு க. தலைமை நிலையச் செயலாளர் டாக்டர் ஹாண்டே பேசியதாவது:—தி. மு க வில் இருப்பவர்களை இனிமேல் திருத்தமுடியாது. ஆனுலும் சில நல்லவர்கள் இன்னமும் அங்கே இருக்கிருர்கள் .தி. மு. க. வைத் திருத்த முடியும் என்று அவர்கள் முயற்சிக்கிருர்கள். ஆனல் அது இனி மேல் முடியாது.

தி. மு. க. பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன் இப்போது எங்களைத் தீவிரமாக தாக்க ஆரம்பித்துள்ளார். அவரை நினைத்தால் பரிதாபமாக இருக்கிறது.

மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் நெடுஞ்செழியன் அங்கேஇருக்கிருர். அப்படிப்பட்ட நெடுஞ்செழியனைப்பற்றி நாங்கள் அதிகம் பேசுவதில்லை. ஆயினும் இப்போது பேச வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

## நெடுஞ்செழியன் விட்ட தூது

நெடுஞ்செழியனுக்கு அ.தி. மு. க. வில் சேரும் எண்ணம் இருந்தது. இது சம்பந்தமாக பல முறை ஆட்களை தூது அனுப்பியிருக்கிருர். அவர் அங்கேயே இருக்கட்டும் என்று எம். ஜி. ஆர். கூறிவிட்டார்.

## கதவை தட்டும் எம்.எல்.ஏ.க்கள்

நெடுஞ்செழியன் மட்டு மல்ல; பல எம்.எல்.ஏ.க்களும் அ. தி. மு. க.வின் கதவைத் தட்டுகிருர்கள். ஆனல் எம். ஜி. ஆர். அவர்கள் எல்லாரும் அங்கேயே இருக்கட்டும், இங்கே வந்தால் கட்சி கெட்டுவிடும் என்று கருதுகிருர்.

அ, தி.மு.க. வில் சேரமுடியாது என்று தெரிந்த பிறகு நெடுஞ்செழியன் சவால் விடுகிருர்.

சிறிது காலத்திற்கு முன்பு ஆறு மாதங்கள் நெடுஞ்செழியன் ஒதுங்கியிருந்தார். அதன் பிறகு அவர் வீட்டில் என்ன நடந்ததோ, மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டார்.

1971-தேர்தலின் போது கருணுநிதியே தம் தொகுதிக்கு எம்.ஜி.ஆர். வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கருணுநிதிக்கு ஒரு தடவை என்ருல் என் தொகுதிக்கு 2 தடவை வரவேண்டும என்று நெடுஞ்செழியன் கேட்டுக் கொண்டார். அப்படி அவர் வந்ததால் அவர்கள் வெற்றிபெற்று சட்டமன்றத்தில் இருக்கிருர்கள்.

## ஜெயப்பிரகாசர்

ஜெயப்பிரகாசர் இங்கு வந்த போது அவர் யார் என்று நாங்கள் கேட்கவில்லை.

ஜெயப்பிரகாசர் யார் என்றே தெரியாதவர்கள் அவருக்கு வரவேற்பு அளித்திருக்கிருர்கள்.

## நோக்கம் என்ன ?

கருணுநிதியை பயன்படுத்தி இந்திராவை இறக்க ஜெயப்பிரகாசர் நினைக்கிருர். ஜெ. பி.யைப் பயன்படுத்தி தி. மு. க. அரசின் ஊழல்களை மறைக்க கருணுநிதி நினைக்கிருர். இவர்களுக்குள் கொள்கை ஒற்றுமை இல்லை. இவர்கள் இருவருமராஜாஜி விழாவில் கலந்துகொண்டிருக்கிருர்கள். ராஜாஜி விழாவில கலந்துகொள்ள கருணுநிதிக்கு என்ன தகுதி இருக்கிறது? தமக்கு பிடிக்கவில்லையென்ருல் எல்லோரது ஜாதியையும் இனத்தையும் பற்றிக் கூறும் கருணுநிதி, ராஜாஜி கைபர் கணவாய் வழிவந்தவர் என்று சொன்னவராவார்.

## ஜெ. பி. அடைந்த குழப்பம்

ராஜாஜி விழாவில் கலந்து கொண்டு பேசிய ஜெயப்பிரகாசர் பிறகு ஒரு பொதுக் கூட்டத்திலும் பேசினுர்.

சென்னையிலிருந்து திருச்சிக்குச் சென்றதும் ஜெயப்பிரகாசர் பிளேட்டை மாற்றினுர். சென்னையில் கருணுநிதியைப் புகழ்ந்தவர் திருச்சியில் காமராஜர்தான் வழிகாட்டவேண்டும் என்று கூறியிருக்கிருர். அந்த அளவுக்கு அவர் குழம்பிப் போய்விட்டார். தாம் குழப்பமடைந்ததாக அவரே கூறிவிட்டார்.

ஆனல் குழப்பம் இங்கு எப்போதோ ஆரம்பித்து விட்டது.

மேற்கண்டவாறு ஹாண்டே பேசினுர்.

கூட்டத்தில் சிவசூரியன், மணிக்கண்ணன், சதானந்தன், பன்னீர்செல்வம் மற்றும் பலர் பேசினுர்கள்.

# அரிசன வீட்டுவசதி வாரியத்திற்கு புதிய தலைவர்

சென்னை, மே 15—தமிழ்நாடு அரிசன வீட்டுவசதி கழகத்திற்கு புதிய தலைவராகவும் நிர்வாக இயக்குநராகவும் ஆர். ஏ. சீதாராமதாஸ் நியமிக்கப்பட்டுள்ளார்,

இதற்குமுன் கன்னியாகுமரி, செங்கல்பட்டு, மதுரை மாவட்டங்களில் கலெக்டராகவும், தமிழ்நாடு தொழில் வணிகத்துறை இயக்குநராகவும் அவர் சிறப்பாக பணியாற்றியுள்ளார்.

## சாதிக்பாட்சா இல்லத் திருமணம்

சென்னை, மே. 15— சாதிக்பாட்சாவின் மைத்துனி நசீர் உன்னிசா பேகத்துக்கும் ஈ. ஆர். ஏ. மகமது பாட்சாவுக்கும் நேற்று காலை ராணி அண்ணாதுரை கல்யாண மண்டபத்தில் திருமணம் நடைபெற்றது.

மணமகன் பி. ஈ. படித்தவர். தமிழ்நாடு குடிநீர் வாரியத்தில் ஜூனியர் என்ஜினியராகப் பணியாற்றுகிருர்.

திருமணத்துக்கு முதல்வர் கருணுநிதி, அமைச்சர் அன்பில் தர்மலிங்கம், கண்ணப்பன், ப. உ. சண்முகம், அன்பழகன், ராசாராம், சி. வி. எம். அண்ணுமலை, மற்றும் பிரமுகர்கள் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

# பழிவாங்காதீர்: கருணுநிதிக்கு எம்.ஜி.ஆர். கோரிக்கை

சென்னை,மே 15—"பழிவாங்கும் எண்ணத்தைக் கைவிட்டு விடுங்கள்" என்று முதலமைச்சர் கருணுநிதிக்கு எம். ஜி. ஆர். வேண்டுகோள் விடுத்தார்.

கறுப்புக்கொடி காட்டுவது சம்பந்தமாக கருணுநிதிக்கு எம்.ஜி. ஆர். பகிரங்க கடிதம் ஒன்றை அனுப்பியிருக்கிருர்.

அ. தி. மு. க. ஆரம்பித்த பிறகு இதுவரை அ.தி மு.க. வினர்தான் தாக்கப்பட்டிருக்கிருர்கள் என்றும், உயிரே போனுலும் அண்ணு காட்டிய அறவழியில் இருந்து பிறழ மாட்டோம் என்றும் எம்.ஜி. ஆர்; தமது கடிதத்தில் தெரிவித்திருக்கிருர்.

மாநகராட்சி ஆஜர் பட்டியல்

# மோசடி வழக்கில் 106 பேர்கள் மீது குற்றப்பத்திரிகை

சென்னை, மே 15—மாநகராட்சி ஆஜர் பட்டியல் ஊழல் வழக்கில் குற்றஞ்சாட்டப்பட்ட 106 பேர்கள்மீது நேற்று குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டது.

தனி நீதிபதி கே. செல்வரத்தினம் ஒவ்வொரு எதிரி மீதும் எந்தெந்தப்பிரிவுகளின் மீது குற்றஞ் சாட்டப்பட்டுள்ளது என்பதைப் படித்தார். எல்லா எதிரிகளும் தாங்கள் குற்றவாளிகள் அல்ல என்று கூறினர்.

நீதிபதி வழக்கு விசாரணை ஜூன் 26-ந் தேதி நடக்கும் என அறிவித்தார்.

முதல் எதிரியான மாநகராட்சியின் முன்னுள் மின்சார சீப் இஞ்ஜினியர் பி. பாலசுப்ரமண்யன் மீது கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டுள்ள தஸ்தாவேஜுகளின் அடிப்படையில் குற்றம் புரிந்ததற்கான ஆதாரம் எதுவும் இல்லையாகையால் அவரை விடுதலை செய்துவிடவேண்டும் என்று அவருடைய வக்கீல் கே. ராமசாமி கோரினுர்.

விசேஷ பப்ளிக் பிராசிக்யூட்டர் எஸ். நடராஜன் இதை எதிர்த்தார். குற்றம் புரிந்ததற்கான ஆதாரம் எதுவும் இல்லையென்ருல் தான் விடுதலை செய்யலாம். இந்த வழக்கில் எதிரிமீது குற்றஞ் சாட்டுவதற்கு தஸ்தாவேஜுகளில் போதிய ஆதாரங்கள் உள்ளன என்று நடராஜன் சொன்னுர்.

நீதிபதி எதிரி வக்கீலின் கோரிக்கையை நிராகரித்து, எல்லா எதிரிகள்மீதும் குற்றப் பத்திரிகையைப் படித்தார்.

மாநகராட்சி ஊழியர்கள் 74 பேர், 7 அப்ருவர்கள், 29 கவுன்சிலர்கள் ஆகியோர் 1969 ஏப்ரலுக்கும் 1973 நவம்பருக்கும் இடையில் மின்சாரம் மற்றும் பல துறைகளில் பொய்யான ஆஜர் பட்டியல்களும், ரசீது தயாரித்து ரூ. 1.26 கோடி வரையில் மாநகராட்சி பணத்தைக் கையாடியதாக வழக்கு.

இவ்வழக்கில் இரண்டு எதிரிகள் வெளியார்கள்.

# மேற்கு வங்க அரசுக்கு ராஜ்யசபை உரிமைக் கமிட்டி கண்டனம்

புதுடெல்லி, மே 15—கடந்த ஆண்டு பிப்ரவரி 2-ம் தேதி மார்க்சிஸ்டு எம்.பி. யான நிரன்கோஷ் மீது நடந்த தாக்குதல் சம்பந்தமாக நடவடிக்கை எடுக்காதது குறித்து மேற்கு வங்க அரசை ராஜ்யசபை உரிமைக் கமிட்டி கண்டித்துள்ளது.

கமிட்டியின் 16-வது அறிக்கை சபையில் தாக்கல் செய்யப்பட்டது.

மேற்கு வங்க அதிகாரிகள் இந்தச் சம்பவம் குறித்து தகுந்த பொறுப்புடனும் எச்சரிக்கையுடனும் செயல்படவில்லை என்று அறிக்கையில் குற்றஞ்சாட்டியுள்ளது.

நிரன்கோஷ் மீது போலீசாரே தாககுதல நடத்தியதாக உரிமைப் பிரச்சினை கொண்டுவரப்பட்டது.

இதுகுறித்து விசாரணை நடத்திய மாஜிஸ்திரேட், போலீசாரின்வாக்குமூலத்தை மட்டுமே எடுத்துக்கொண்டதாக அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

# ஆரியபட்டா வேகம், தூரம் கண்டுபிடிக்க நவீன முறை

பெங்களூர், மே 14—விண்வெளியில் சுற்றி வரும் 'ஆரியபட்டா' பூமியிலிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது. அதனுடைய வேகம் என்ன வென்பதை இந்திய விண்வெளி விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

அதிக நவீன விஞ்ஞான சோதனைகள் மூலம் இவை கண்டு பிடிக்கபபட்டன. தற்போது தயாராகி வரும இரண்டாவது செயற்கைக் கோளுக்கு இந்த சோதனை முறைகள் மிகவும் உதவிகரமானவை.

இவ்வாறு திட்ட டைரக்டர் யூ ஆர். ராவ் கூறினுர். இந்த சோதனைக்கான கருவிகள் யாவும் இந்திய விஞ்ஞானிகளால் உருவாக்கப்பட்டவை.

மாணவர்கள்

தூர் வாரும் பணி

# சுந்தர வடிவேலு பார்த்தார்

சென்னை, மே 15—சென்னை பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் சென்னை கபாலீசுவரா கோவிலில் தூர் வாரும் பணியில் ஈடுபட்டு வருகிருர்கள் அல்லவா?

அவர்களை சென்னை பல்கலை கழகத் துணை வேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு பார்த்தார். மாணவர்களின் பணியை அவர் பாராட்டினுர்.

# புற்றுநோயை கண்டுபிடிக்கபுது வழி

கல்கத்தா, மே 15—அகில இந்திய வைத்திய ஆராய்ச்சி கழகத்தில் பணி ஆற்றும் நிபுணர்கள் விரைவாக புற்று நோயைக் கண்டு பிடிக்கும் செயல் முறை ஒன்றை உருவாக்கி உள்ளனர் இரத்தத்தில் உள்ள ரத்த அணுக்களின் விகிதத்தை சோதனை செய்வதன் மூலம் புற்று நோயை கண்டு பிடிக்கலாம் என்பதே விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ள செயல் முறை,

இந்தத் தகவலை நிறுவன இயக்குனர் ஆர். என். சக்கரவர்த்தி கூறினுர்.

புற்று நோயால் பாதிக்கப்பட்டவர்களின் ரத்தத்தை ஆராய்ச்சிக்குப் பயன்படுத்திக்கொண்டு கல்கத்தா மருத்துவ நிறுவனத்தின் ஒத்துழைப்போடு ஸ்ரீவத்சவா என்பவர் இந்த செயல் முறையை கண்டுபிடித்து இருக்கிருர்.

இந்த ஆராய்ச்சியின் விளைவாக ரத்த அணுக்களின் விகிதத்தில் மாற்றம் ஏற்படுவது புற்று நோய் இருப்பதற்கான அறிகுறியாகும் என்பது கண்டு பிடிக்கப்பட்டதாகவும் அவர் கூறினுர்.

புதிய செயல் முறை கண்டு பிடிக்கப்பட்டது புற்று நோய்க்கு புதிய மருந்து கண்டு பிடிக்க உதவியாக இருக்கும் என்று சக்கரவர்த்தி மேலும் கூறினுர்.

## தமிழ்ப் படங்களில் நகைச்சுவை

"ஐய்யோ ஆபத்து" "காப்பாற்ற வாருங்கள்"

பித்தளைக்குப் பொன்முலாம் பூசியதைப்போல், புலித்த புள்ளிமானின் தோலைப் போர்த்தியதைப் போல், அழுகல் பழத்திற்கு அழகான வண்ணத்தாள் சுற்றியதைப்போல் —

இரு பொருள்படும் கீழ்த்தரமான வசனங்களுக்கு "நகைச்சுவை" என்று நாமகரணம் சூட்டுவோருக்குக் கடும் கண்டனம் !

"நவமணி" நாளிதழில் தொடங்கிய கருத்துப் போர் தொடர்கிறது.

18-ம் தேதி இதழில்

நடிகர்கள் :—

சிவகுமார், நாகேஷ்

கருத்துரைகள் இடம்பெறும்

# சிவாஜியை கண்ணீர்விட வைத்த நாடகம்



கவிஞர் எஸ். டி. சுந்தரம் எழுதி ,ண்மையில் வானொலியில் ஒலி ரப்பான 'சம்பூர்ண ராமாயணம்' நாடகத்தைக் கேட்டு கண்ணீர் விட்டதாக சிவாஜி கணேசன் கூறினார்.

மேலும் அவர் தெரிவித்த சுவையான தகவல்களும், கருத்தும் வருமாறு:—

பல விதத்திலும் சலித்து, அலுத்துப்போன மக்களின் மனதில் கலை மூலம் பல நல்ல கருத்துகளைக் கூறவேண்டும் என்பதை நான் லட்சியமாகக் கொண்டு செயல்படுவதோடு சக கலைஞர்களிடமும் கூறுவதுண்டு. சினிமாவிலும், நாடகத்திலும் புரட்சி என்ற பெயரால பால் உணர்வுகளை வெளிப்படுத்தி நடிக்கவும், நம்பமுடியாத விஷயங்களை புதுமை என்று சொலலவும் விரும்பாதவன் நான்.

நான் அறிந்த கலையெனும் புத்தகத்தில் நாடகம் என்றால் நாட்டின் அகம்—நாடகம் என்பதேயாகும். அந்த நாடகம் ஜீவனுள்ளதாக இருந்தால் சிரஞ்சீவித்தன்மை பெறுகிறது—காவியமாகத் திகழ்கிறது.

நல்லது எங்கு நடந்தாலும் நானே வலுவில் சென்று பாராட்டுவது என் வழக்கம். காரணம்...? நான் ரசிகன் என்பதேயாகும். பாத்திரங்களை ரசித்து அதனுடன் ஒன்றி வாழ்வதனால் என் நினைவுகளைத் தூண்டிவிட்ட கவிஞர் எஸ். டி. சுந்தரத்தைப் பாராட்டுகிறேன்.

புதுப்புது பாணிகள் வந்தாலும், எத்தனையோ புத்தகங்கள் காலத்திற்கேற்றபடி கதைகளைச் சொன்னாலும், பஞ்சாங்கம் அதன் பெருமையை இழக்கவா செய்கிறது?

அந்தநாளில் "சம்பூர்ண ராமாயணம்" நாடகத்தில் சீதை வேடம் போட்டு,

'யாரென இந்தப் புருஷனை அறிகிலேனே!"

என்ற பாடலை பாடி நடித்தேன். அதில் வரும் அத்தனை வேடங்களையும் போட்டு நடித்திருக்கிறேன்.

கவிஞர் எஸ். டி. சுந்தரம் பழமை மாறாமல், பெருமை குறையாமல் நாடகத்தை தயாரித்துள்ளார்.

என் கலைக்குடும்ப உடன் பிறப்புகள் எஸ். வி. சுப்பையா பகவதி அண்ணாச்சி, சீர்காழி கோவிந்தராஜன், டி. எல். மகராஜன், ஏ. எல். ராகவன், எம். என். ராஜம், காந்திமதி, இந்திரா தேவி ஆகியோர் சிறப்புற பாத்திரமேற்று சக்ரவர்த்தித் திருமகனின் கதைக்கு சிறப்பளித்துள்ளனர். அவர்களது குரல்கள் ஒலித்தபோது எண்ணத்தால் நானும் பாத்திரமாகவே மாறினேன். மானசீகமாக அவர்களோடு நடித்து அவர்கள் தந்த காவியத்தில் ஒன்றி கண்ணீர்விட்டேன்.

வானொலிமூலம் கவிஞர் எஸ். டி. எஸ். துவக்கிய இப்பணி மென்மேலும் தொடரட்டும்.

இவ்வாறு சிவாஜி கணேசன் கூறியுள்ளார்.



"பணக்காரப் பெண்" படத்தில் ஜெயசித்ரா.

# வேறு கடை விரித்து வியாபாரம் தொடங்கலாமே!



'தமிழ்ப் படங்களில் நகைச் சுவை' என்ற தலைப்பில் திரையுலக முன்னணியினரின் கருத்துரைகள் 'நவமணி'யில் இடம் பெற்றன. இப்போது—தரமான தமிழ்ப்பாடல்களை திரைப்படங்களுக்கு எழுதி புகழ் பெற்ற கவிஞர் பூவை. செங்குட்டுவன் கவிதை இங்கு இடம் பெறுகிறது.

நகைப்பதற்கும் சுவைப்பதற்கும் ஏற்றவாறு
நகைச்சுவைகள் தற்போது இருப்பதில்லை!
நகைவேறு சுவைவேறாய் இருபொருளில் — வரும்
நாராசக கருத்துக்கோ பஞ்சமில்லை!
வகையோடு இருக்கின்ற தமிழ்த்திரையில்
வகையற்ற நகைச்சுவைகள் தேவையில்லை!
தொகைவந்தால் போதுமென்ற எண்ணத்தோடு
எழுத்தாளன் எழுதுவதும் நேர்மையில்லை!

அற்புதங்கள் நிகழ்த்துகின்ற கவிஞனுக்கு
ஆயுதங்கள் பேனாவும் வெள்ளைத்தாளும்!
சொ சலம்பம் நடத்துகின்ற எழுத்தாளர்க்கும் — முன்
சொன்னதுவே உளபடி பொருத்தமாகும்! — இவர்தம்
கற்பனைகள் நாட்டுக்கும் மக்களுக்கும்
நற்பயனை அளிக்குமெனில் பெருமை உண்டு!
கற்பனைகள் விற்பனைக்கு மட்டுமென்றால் — வேறு
கடைவிரித்து வியாபாரம் தொடங்கலாமே!

எண்ணங்கள் ஏப்பங்கள் அல்லவென்றும்
எழுத்தாளர் இதைஉணர வேண்டுமென்றும்,
சொன்னவராம் பேரறிஞர் அண்ணாவாலே
சுவைமிக்க நகைச்சுவைகள் கிடைத்ததுண்டு! — எழுத்து
மன்னவராம் கலைஞரின் பேனாமுனையில் —
பிறப்பெடுத்த நகைச்சுவையில் கருத்தும் உண்டு!
அன்னைமொழி பண்பாடு குறையா வண்ணம்
அருட்செல்வர் நகைச்சுவையும் அமைவதுண்டு!

படமெல்லாம் பரபரப்பாய் ஓடுதற்கு
பச்சையான நகைச்சுவையே தேவையென்று
இடம்பார்த்து எப்படியோ திணித்துவிட்டு
எல்லாமே ரசிகர்களின் விருப்பமென்பார்!
தடம்மாறித் தடுமாறும் தமிழ்த்திரையில்
தரமான படம்வருதல் குறைந்ததாலே,
குடும்பத்துடன்காண வருக என்று
கூப்பிடும் விளம்பரமும் குறைந்ததின்று!

சிரிக்கின்ற நேரத்தில் நம்மையெல்லாம்
சிந்திக்கத் தூண்டியவர் கலைவாணர்
இருக்கின்ற வகையினிலே நகைச்சுவையால்
இருபொருளில் ஆபாசம் கலக்கவில்லை!
நறுக்கென்று நல்லதொரு கருத்தைவைத்து
நகைச்சுவையைச் சொல்லுவதை விட்டுவிட்டு
வெறுக்கின்ற நகைச்சுவையை எழுத்தின்மூலம்
விலையாக்க நினைப்போர்க்கு ஒன்றுசொல்வேன்,

எண்ணோடு எழுத்தையும் மனிதன்கொண்ட
கண்ணாகக் கருதுவது இந்தநாடு! — பிறந்த
மண்ணோடு பேசுகின்ற மொழியைக்கூட
அன்னையெனக் கொண்டாடும் நமதுநாடு!
எந்நாளும் உலகத்து மக்களுக்கு,
நாகரிகத் தொட்டிலெனத் திகழும்நாடு!
'இந்நாடு தமிழ்நாடு' இன்னும்கூட
இருக்கிறது பண்பாடு, மறக்கவேண்டாம்!

# திரை உலகம்



"சக்கைபோடு போடு ராஜா" படத்தில் மேஜர் சுந்தர் ராஜன், ராதிகா.

**அன்றும் - இன்றும்**

'படப்பிடிப்பில் நடிகர், நடிகையர் நடவடிக்கை'

சுடச்சுட, சுவையான ஒரு கட்டுரை 22-ம் தேதி 'நவமணி'யில் இடம் பெறும்



"புரட்சிப் பித்தன்" வண்ணப்படத்தில் எம். ஜி. ஆர்., லதா.

# 'ஏழைக்கும் காலம்வரும்' படத்தில் ஸ்ரீகாந்த், சுபா

சாரதா கம்பைன்சார் தயாரிக்கும் "ஏழைக்கும் காலம் வரும்" படத்தில் ஸ்ரீகாந்த் சுபா இருவரும் இணைந்து நடிக்கின்றனர்.

மற்றும் சுந்தர்ராஜன், அசோகன், மனோரமா, சுகுமாரி, சுருளிராஜன் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கண்ணதாசன், வாலி பாடல்களுக்கு வி. குமார் இசையமைக்கிறார்.

ஏ. சி. திருலோகசந்தரிடம் நீண்ட காலம் துணை இயக்குநராகப் பணியாற்றிய எஸ். ராஜேந்தர் இந்தப் படத்தை இயக்குகிறார்.

ஜெயகுமார், ராமகிருஷ்ணன் இருவரும் தயாரிக்கின்றனர்.

# அலெக்சாண்டர் வேடத்தில் சிவாஜி

"அவன் ஒரு சரித்திரம்" படத்தில் சிவாஜி கணேசன் அலெக்சாண்டராக நடிக்கிறார்?

கல்லூரியில் எம். ஏ. படிக்கும் மாணவர்கள் நாடகம் நடத்துவது போன்ற காட்சி இந்தப்படத்தில் இடம் பெற்றுள்ளது.

மாணவராக வரும் சிவாஜி கணேசன் அலெக்சாண்டராகவும், மாணவியாகத் தோன்றும் மஞ்சுளா ரொக்சோனாவாகவும் நடிக்கின்றனர்.

சிவாஜி கலெக்டராக இந்தப்படத்தில் இதுவரையில் ஏற்று நடிக்காத வேடத்தில் நடிக்கிறார்.

மற்றும் ஸ்ரீகாந்த், டி. கே. பகவதி, வி. கே. ராமசாமி, பண்டரிபாய், எம். பானுமதி ஆகியோர் நடிக்கின்றனர்.

கே. எஸ். பிரகாஷ்ராவ் டைரக்ட் செய்கிறார்.



அணையாவிளக்கு படத்தில் மு. க. முத்து.

கிருஷ்ணனாக சிவகுமாரும் நடிக்கின்றனர்.

சீனிவாசா கம்பெனி தயாரிக்கும் இந்தப் படத்திற்கு கதை வசனம் எழுதி ஏ. பி. நாகராஜன் டைரக்ட் செய்கிறார்.

கம்சனாக மனோகரும் பலராமராக சிவாஜி கணேசனும் நடிக்கின்றனர்.

# கமலஹாசனுக்கு 'இளைஞர் திலகம்' பட்டம்

நடிகர் கமலஹாசனுக்கு ஸ்பார்டன் குழுவினர் 'இளைஞர் திலகம்' எனும் பட்டத்தை வழங்கினர்.

இதுவரையில் திருமணங்களிலும், பல்வேறு விழாக்களிலும் இசை நிகழ்ச்சிகள் நடத்தி வந்த ஸ்பார்டன் குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சி சென்னை மிட்லண்ட் திரையரங்கில நடைபெற்றது.

நடிகை ஜெயசித்ரா குத்து விளக்கை ஏற்றி வைத்தார்.

பாடகர்களை கமலஹாசன் அறிமுகப்படுத்தி வைத்தார்.

விழாவில் கமலஹாசனுக்கு 'இளைஞர் திலகம்' எனும் பட்டத்தை 'பிலிம் நியூஸ்' ஆனந்தன் வழங்கி பாராட்டிப் பேசினார்.

குழு அமைப்பாளர் சுப்பிரமணியன் வரவேற்றார்.

# "வந்தது வசந்தம்"

நீல்கமல் மூவிசார் "வந்தது வசந்தம்" என்ற படத்தைத் தயாரிக்கின்றனர்.

ஜெயகணேஷ், பிரமிளா, ஜூனியர் பாலையா, மாஸ்டர் சேகர், பேபி இந்திரா ஆகியோர் நடிக்கின்றனர்.

விஜயன் காமிராவைக் கவனிக்கிறார். ஏ. எம். ராஜா இசையமைக்கிறார்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4 South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor-in-charge: G. Dhanaraj.

# நாகேஷுக்குவந்த திடீர் வாழ்வு

ஏழ்மைக் கோலத்தில் உள்ள நாகேஷ் தனது வீட்டுக்குத் திரும்பி வந்து பார்த்தபோது ஒரே திகைப்பு!

'வீடு எங்கே போய் விட்டது?' அவர் தன்னைத்தானே கேட்டுக் கொள்கிறார். சுற்றிலும் பார்க்கிறார்—ஒன்றுமே தெரியவில்லை.

அதே வீதி—அவர் வீடு இருந்த இடத்தில் ஒரு பெரிய மாளிகை இருக்கிறது.

'மனைவி மக்கள் எங்கே போனார்களோ' என்று தவித்தபடி நிற்கும்போது, மனைவியின் குரல் மாடியிலிருந்து கேட்கிறது. அவள் இறங்கி வந்து உள்ளே அழைத்துச் செல்கிறாள்.

மனைவியின் ஆடை அணிமணிகள் அலங்காரக்கோலம் எல்லாமே கனவுக் காட்சி போல் அவருக்கு இருக்கிறது.

மாளிகைக்குள் நுழைகிறார். சுற்றிலும் கண்களை இமைக்காமல் பார்க்கிறார்.

"சுசீலை....பசி வந்திடப் பத்தும் பறந்துவிடும் என்பார்கள். பத்தும் வந்துவிட்டால் பசி பறந்துவிடுகிறது. அதற்குமுன்பு வெளியில் சென்றாலும் வந்தாலும் நாம்பாட்டிற்குப்போவோம்-வருவோம். இனிமேல் அப்படிப் போக முடியாது. ஏனென்றால்....கதவு உள்ள வீட்டிற்கு வந்துவிட்டோம். கதவைப் பூட்டிக் கொண்டு தான் போக வேண்டும். முன்பு வெய்யில், மழை எல்லாவற்றையும் வீட்டில் இருந்தபடியே பார்த்துக் கொள்ளலாம். இப்போது வீட்டைவிட்டு வெளியில் சென்றால்தான் வெய்யில் காய்கிறதா—மழை பெய்கிறதா என்று தெரியும். கொஞ்சம் சிரமம் தாம் பார்த்துக் கொள்ளலாம்" என்கிறார்,

இந்த சமயத்தில் அவர்மீது இருந்த கந்தல் துண்டு மனைவியின் பட்டுப் புடவைமீது பட்டுவிடுகிறது. அவள் அதை ஒதுக்குகிறாள். மீண்டும் படுகிறது. துண்டையே எடுத்துத் தள்ளிவிடுகிறாள்.

"ஓ...உன் ஜரிகையைத் துண்டு மறைக்கிறதோ? சரி... சரி...சுற்றிக் காட்டு" என்கிறார் நாகேஷ்.

அவர் மனைவியோ தன் புடவை, நகைகளைப் பார்ப்பதற்குத்தான் கணவர் ஆசையாகக் கேட்கிறார் என்று பொம்மைபோல் தன்னையே சுற்றிக்கொள்கிறாள்.

"வீட்டைச் சுற்றிக் காட்டும்படி சொன்னேன்" என்கிறார் நாகேஷ் சிரித்தபடி.

இந்தக் காட்சி "கிருஷ்ண லீலா" வண்ணப்படத்திற்காக வாசு ஸ்டுடியோவில நேற்று படமாக்கப்பட்டது.

குசேலராக நாகேஷும்

